# வைணவத் தலங்கள் (பெருமாள் கோயில்கள்)

[தி. கி. நாராயணசாமி நாயுடு, கடலூர் N. T]

ஆழ்வார் அருளிச் செயலில் கண்ட திவ்ய தேசங்கள் 108 என்பர். இவற்றை மங்களாசாசனம் பெற்றவை என்று கூறுவது வைணவ மரபு. இந்த 108 இடங்களும் (i) பதிகமும் பாடலும் (ii) பதிகம் மட்டில் (iii) பாட்டு மட்டில், பெற்று மூன்று வகையாக இருக்கின்றன. (இவை யாவும் சேர்ந்தே 108 ஆகும்) சிவன் கோயில்களில் பதிகம் பெற்றவை (பாடல் பெற்றது 274) பாட்டு பெற்றவை (வைப்புத்தலம் சுமார் 260) என்ற இருபிரிவுகள் உண்டு. அவை வருமாறு: -

| | | | |
|---|---|---|---|
| 1 | அட்டபுயகரம் ‡ 2 | 27 | கள்வனூர் ⁎ 1 |
| 2 | அத்தியூர் ⁎ 3 | 28 | காட்கரை † 1 |
| 3 | அநந்தபுரம் † 1 | 29 | காரகம் ⁎ 1 |
| 4 | அயோத்தி ‡ 5 | 30 | கார்வானம் ⁎ 1 |
| 5 | அரங்கம் ⁎ 11 | 31 | காவளம்பாடி † 1 |
| 6 | அரிமேய விண்ண கரம் † 1 | 32 | காழி- சீராம விண்ணகரம் † 1 |
| 7 | அல்லிக்கேணி ‡ 3 | 33 | குடந்தை ‡ 1 |
| 8 | அழுந்தூர் ‡ 1 | 34 | குருகூர் † 1 |
| 9 | அன்பில் ⁎ 1 | 35 | குளந்தை ⁎ 1 |
| 10 | ஆதனூர் ⁎ 1 | 36 | குறுங்குடி ‡ 4 |
| 11 | ஆய்ப்பாடி ⁎ 3 | 37 | கூடலூர் |
| 12 | ஆலி - திருநகரி ‡ 2 | 38 | கூடல் ⁎ 2 |
| 13 | இடவெந்தை ‡ 1 | 39 | கோட்டியூர் ‡ 5 |
| 14 | இந்தளூர் ‡ 1 | 40 | கோவலூர் ‡ 5 |
| 15 | ஊரகம் ⁎ 2 | 41 | கோழி ⁎ 1 |
| 16 | எவ்வுள் ‡ 2 | 42 | கோளூர் ‡ 1 |
| 17 | கடல்மல்லை ‡ 2 | 43 | சாளக்கிராமம் ‡ 2 |
| 18 | கடிகை ⁎ 2 | 44 | சிங்கவேள்குன்றம் † 1 |
| 19 | கடித்தானம் † 1 | 45 | சித்ரகூடம் ‡ 2 |
| 20 | கண்டங்கடி நகர் † 1 | 46 | சிரீவரமங்கை † 1 |
| 21 | கண்டியூர் ⁎ 1 | 47 | சிறுபுலியூர் † 1 |
| 22 | கண்ணங்குடி † 1 | 48 | செங்குன்றூர் † 1 |
| 23 | கண்ணபுரம் ‡ 5 | 49 | செம்பொன் செய்கோயில் † 1 |
| 24 | கண்ணமங்கை ‡ 1 | 50 | சேறை |
| 25 | கரம்பனூர் ⁎ 1 | 51 | தஞ்சைமாமணிக் கோயில் ⁎ 2 |
| 26 | கவித்தலம் ⁎ 1 | 52 | தண்கா ⁎ 1 |

| | | | |
|---|---|---|---|
| 53 | தண்கால் ⁕ 2 | 81 | பேர் நகர் ‡ 4 |
| 54 | தலைச்சங்க நாண்மதியம் ⁕ 1 | 82 | மணிக்கூடம் † 1 |
| 55 | துவராபதி ⁕ 5 | 83 | மணிமாடக் கோயில் † 1 |
| 56 | தெற்றியம்பலம் † 1 | 84 | மாலிருஞ்சோலை ‡ 6 |
| 57 | தேவனார்தொகை † 1 | 85 | மூழிக்களம் ‡ 2 |
| 58 | தொலைவில்லி மங்கலம் † 1 | 86 | மெய்யம் ⁕ 1 |
| 59 | நந்திபுர விண்ணகரம் † 1 | 87 | மோகூர் ‡ 2 |
| 60 | நறையூர் ‡ 1 | 88 | வடமதுரை ‡ 5 |
| 61 | நாகை † 1 | 89 | வண்பரிசாரம் ⁕ 1 |
| 62 | நாவாய் ‡ 2 | 90 | வண்புருடோத்தமம் † 1 |
| 63 | நிலாத்திங்கள் துண்டம் ⁕ 1 | 91 | வண்வண்டூர் † 1 |
| 64 | நின்றவூர் ⁕ 1 | 92 | வதரியாச்சிரமம் ‡ 2 |
| 65 | நீரகம் ⁕ 1 | 93 | வயித்திரபுரம் † 1 |
| 66 | நீர்மலை ‡ 2 | 94 | வரகுணமங்கை ⁕ 1 |
| 67 | நைமிசாரண்யம் † 1 | 95 | வல்லவாழ் ‡ 2 |
| 68 | பரமபதம் ⁕ 8 | 96 | வாட்டாறு † 1 |
| 69 | பரமேச்சுர விண்ணகரம் † 1 | 97 | வாறன்முளை † 1 |
| 70 | பவளவண்ணம் ⁕ 1 | 98 | விண்ணகர் ‡ 3 |
| 71 | பாடகம் ⁕ 4 | 99 | வித்துவக்கோடு † 1 |
| 72 | பார்த்தன்பள்ளி † 1 | 100 | வில்லிபுத்தூர் ⁕ 2 |
| 73 | பாற்கடல் ⁕ 10 | 101 | வெஃகா ⁕ 5 |
| 74 | பிரிதி 1 | 102 | வெள்ளக்குளம் † 1 |
| 75 | புட்குழி ⁕ 1 | 103 | வெள்ளறை ‡ 2 |
| 76 | புலியூர் 2 | 104 | வெள்ளியங்குடி † 1 |
| 77 | புல்லாணி 1 | 105 | வேங்கடம் ‡ 10 |
| 78 | புளிங்குடி 1 | 106 | வேளுக்கை ⁕ 2 |
| 79 | புள்ளம்பூதங்குடி † 1 | 107 | வைகுந்தம் ⁕ 1 |
| 80 | பேரெயில் † 1 | 108 | வைகுந்தவிண்ணகரம் ‡ 1 |

இப்பட்டியலில் தலப்பெயருக்கு இவற்றில் உள்ள குறிகளின் விளக்கம் வருமாறு: -

⁕ பாட்டு பெற்றவை † பதிகப் பெற்றவை ‡ பதிகமும் பாட்டும் பெற்றவை. இவற்றில் உள்ள எண்கள் பாட்டு, அல்லது பதிகமும் பெற்றதன் தொகை சைவத்தலமான காளத்தியைச் சைவர் தொண்டை நாட்டைச் சேர்ந்ததென்பர். அதன் அண்மையில் உள்ள வைணவக் கோயிலான வேங்கடத்தை வைணவர் வட நாட்டுத் தலமாக வகைப்படுத்தியுள்ளார்கள்.

இந்த 108 - ல் ஆழ்வார்களில் ஒருவரால் மட்டும் கூறப்பட்டவை **67**. அவை (தல வரிசை எண்படி) 3, 6, 8 - 10, 13, 14, 19 - - 22, 24 - 32, 34, 35, 37, 41, 42, 44, 46 -

50, 52, 54, 56 - 61, 63 - 65, 67, 69, 70, 72, 74, 75, 77 - 80, 82, 83, 86. 89 - 91, 93, 94, 96, 97, 99, 102, 104, 107, 108. **திருப்பாணாழ்வார் (3)** 5, 68, 105, **தொண்டரடிப் பொடியார் (4)** 4, 5, 73, 88. **பொய்கையார் (6)** 5, 40, 68, 73, 101, 105 (98 - யும் குறிப்பதாகவும் மரபு உண்டு) **குலசேகரர் (8)** 4, 5, 12, 23, 45, 73, 99, 105. **ஆண்டாள் (11)** 5, 11; 23, 33, 55, 68, 73, 84, 88, 100, 105. **பூதத்தாழ்வார் (13)** 2, 5, 17, 33, 39, 40, 51, 53, 66, 71, 73, 84, 105. **பேயாழ்வார் (15)** 1, 2, 5, 7, 18, 33, 39, 68, 71, 73, 84, 98, 101, 105. 106. **திருமழிசையார் (17)** 5, 7, 9, 15, 16, 26, 33, 36, 38, 39 55, 68, 71, 73, 81, 101, 105. **பெரியாழ்வார் (19)** 4, 5, 10, 20, 23, 33, 36, 39, 43, 55, 68, 73, 81, 84, 88, 92, 100. 163, 105. **நம்மாழ்வார் (36)** 3 - 5, 19, 23, 28, 33 - 36, 42, 46, 48, 55, 58, 62, 68, 73, 76, 78, 80, 81, 84, 85, 87 - 89, 91, 94 - 98, 101, 105, 107. **திருமங்கை மன்னன் (86)** 1, 2, 4 - 8, 10 - 18, 21 - 25. 27. 29 - 33, 36 - 41, 43 - 45, 47, 49 -57, 59 - 77, 79, 81 - 88, 90, 92, 93, 95, 98, 101 - 106, 108.

காணமுடியாத பாற்கடல், பரமபதம் ஆகிய இருதலங்களையும் நீக்கிப் பிருந்தாவனம், கோவர்த்தனம் ஆகிய இரண்டையும் சேர்ப்பது இக்கால வழக்கு. இது பண்டைய மரபுக்குமுரணானது.

இந்த 108 இடங்களில் இன்றைய தமிழ் நாட்டில் இருப்பவை **83**. மற்றவை வடநாட்டிலும், மலை நாட்டிலும் இருப்பவை. பாடல் பெற்ற சிவன் கோயிலும் அருளிச் செயல் பெற்ற பெருமாள் கோயிலும் ஒரே இடத்திலும், ஒரே ஊரில் இரு இடங்களாகவும் உள்ளன. தில்லையில் சித்திர்கூடத்தில் கோவிந்தராஜரையும் பொன்னம்பலத்தில் கூத்தப்பெருமானையும் அணைத்து, அடைய வளைந்த ஒரே சுற்றினுள் இருப்பது காணலாம். காஞ்சியில் ஏகம்பர் கோயிலில் நிலாத் திங்கள் துண்டப் பெருமாளும், காமாட்சி அம்மை கோயிலில் கள்வரும் உள்ளனர். அழுந்தூர், திருநின்றவூர், குடந்தை, தலைச்சங்காடு (தலைச்சங்க நாண் மதியம்), வடகுரங்காடுதுறை, நாகை, நாகேச்சுரம்) விண்ணகர் - ஒப்பிலியப்டன்), நறையூர், சேறை, கண்டியூர், உறையூர், அன்பில், மதுரை (கூடல்), கோவலூர், சீர்காழி, முதலிய ஊர்களில் சிறந்த இருகோயில்களும் உள்ளன.



**சித்தாந்தம்** - 1962 ஆு - **நவம்பர் மீ**

.